# நல்ல கதைகள்

பல்கலைப் பேரறிஞர்

தேசிய விருதுபெற்ற பேராசிரியர்

டாக்டர் எஸ். நவராஜ் செல்லையா

M.A., M.P.Ed. Ph.D., D.Litt., D.Ed., FUWAI

ராஜ்மோகன் பதிப்பகம்
8, போலீஸ் குவார்ட்டர்ஸ் ரோடு,
தி. நகர், சென்னை - 600 017.
தொலைபேசி : 434 22 32

சாந்திமலர் பதிப்பகம்
8, போலீஸ் குவார்ட்டர்ஸ் ரோடு,
தி. நகர், சென்னை-600 017.
தொலைபேசி : 4332696

# நூல் விபர அட்டவணை


நூலின் பெயர் : **நல்ல கதைகள்**

மொழி : தமிழ்

பொருள் : சிறுவர் நீதிக் கதைகள்

ஆசிரியர் : டாக்டர் எஸ். நவராஜ்செல்லையா (1937-2001)

பதிப்பு : முதல் பதிப்பு டிசம்பர் 2002

நூலின் அளவு : கிரவுன்

படிகள் : 1200

தாள் : வெள்ளை

பக்கங்கள் : 96

நூல்கட்டுமானம்: பேப்பர் அட்டைக்கட்டு

---

**விலை : ரூ. 20-00**

---





வெளியிட்டோர் : சாந்திமலர் பதிப்பகம்
8, போலீஸ் குவார்ட்டர்ஸ் ரோடு
தி. நகர், சென்னை-600 017,
தொலைபேசி : 4332696

அச்சிட்டோர் : எவரெடி பிரிண்டர்ஸ்
தி. நகர், சென்னை-600 017.
தொலைபேசி : 8252271

# பதிப்புரை

இப் புத்தகத்தில் உடங்கியுள்ள கதைகள் அனைத்தும் சிறுவர்க்குச் சிறந்தவை. 'பணம் தந்த பரிசில்' வரும் கண்ணனைப் போன்ற மாணவர்கள் பலர் இன்றும் உள்ளனர். கண்ணன் திருந்துவது போல் இக்கதையாலும் பலர் திருந்துவார்கள் என்று நான் உறுதியாக நம்புகிறேன். 'தூக்கம் தந்த பரிசு' இன்றைய சிறர்க்கு ஒரு சிறந்த பாடமாகும். மாணவரில் பலர் தூக்கத்தால் தங்களது கல்வியினை இழந்து வாழ்வில் துயறுற்று வருந்துகின்றனர். அவர்கள் தூக்கத்தால் வாழ்வில் நல்லதொரு வாய்ப்பை இழந்த மணியை நினைத்துக் கொள்ளட்டும். அன்பு உலகின் அனைத்துக்கும் அடிப்படை. அன்பால் எவரையும் நன்னெறிப் படுத்தலாம். இக்கருத்துக்களை மையமாகக் கொண்டு 'அன்பு தந்த பரிசு' என்னும் கதை எழுதப் பட்டுள்ளது. பல்வேறு தீய குணங்களைத் தன்னகத்தே கொண்ட சிங்காரம் அன்பால் திருத்தப் பட்டு தன்னைத் தாக்கிய சந்திரனையும் நண்பனாக்கிக் கொள்ளும் கதைதான் 'அன்பு தந்த பரிசு' இம்மூன்று கதைகளும் சிறுவர் கதையுலகில் மூன்று மணிகளாக என்றும் ஒளி விடும் என்பதில் ஐயமில்லை.

இந்நூலை எங்கள் பதிப்பகத்தில் வெளியிட வாய்ப்பளித்த டாக்டர். எஸ். நவராஜ் செல்லையா அவர்களுக்கு எங்கள் நன்றி.

# பொருளடக்கம்

# 1. பணம் தந்த பரிசு

கண்ணனுடைய கண்கள் மூடிய வாறு இருந்தது, அவனது மனம், ஆனந்த நினைவுகளில் உல்லாச ஊஞ்சல் ஆடிக் கொண்டிருந்தது.

அவன் அரைத் தூக்கத்தில் இருப்பது போல் அமர்ந்திருந்தான். அவனது நெற்றியில் சுருக்கம் விழுந்து விரிந்தது, எதையோ அவன் ஆழ்ந்து யோசிப்பதை வெளிப் படுத்திக் கொண்டிருந்தது.

''இன்று மாலை வரவேண்டியது தான். வீட்டிற்குப் போக வேண்டும். போனதும், அந்த மூலைக்குள்ளே கையைவிட்டு 'அதை' எடுத்துக் கொண்டு அப்படியே புறப்பட்டு...''

அணைகடந்து ஓடுகின்ற புது வெள்ளம் போல, அவனது ஆசை

பாடிக் கொண்டிருந்தது. கறுப்பனை அதற்கு இதமாக தாளம் போட்டுக் கொண்டிருந்தது.

வகுப்பில் உட்கார்ந்திருக்கிறோமே. ஆசிரியர் அருமையாகப் பாடம் சொல்லித் தந்து கொண்டிருக்கிறாரே என்ற எண்ணம் அவனுக்கு எழவில்லை.

வகுப்பின் கடைசியிலே, ஒரு மூலையில்தான் கண்ணன் எப்பொழுதும் உட்கார்ந்திருப்பான். 'மாப்பிள்ளை பெஞ்சு' என்று அதற்குப் பெயர். கண்ணனுக்கு அந்த இடம் தான் எப்பொழுதும் பிடிக்கும்.

மூலையில் உட்கார்ந்திருக்கும் அவனது மூளை, வேறு எதையாவது தான் யோசித்துக் கொண்டிருக்கும். பாடமோ, ஆசிரியர் போடும்

சத்தமோ அவன் காதுவரை கூட போகாது. அவ்வளவு தூரம் காது களைப் பழக்கி வைத்திருந்தான்.

கண்ணனது பெஞ்சைத் தடதட வென தட்டும் சத்தம். கலகலவென மாணவர்கள் சிரிப்பொலி.

திடுக்கிட்டு விழித்தான் கண்ணன். திரு திருவென தன் ஆந்தைக் கண்களை அகல அகல விரித்தான். ஆசிரியர் அருகில் நிற்பதைப் பார்த்ததும் திகைத்தான்.

கண்ணா! "எந்த உலகத்தில் இருக் கிறாய்? இந்திரலோகமா அல்லது சந்திர லோகமா!" என்று ஆசிரியர் கேட்டார்.

எமலோகமா இருக்கும் சார்!

மாணவர்களிலே ஒரு வாயாடி மாணிக்கம் அப்படிக் கூற, இடி சத்தம்

போல எல்லா மாணவர்களும் ஏக காலத்தில் வாய்விட்டுச் சிரித்தனர்.

'வெளியே வா! உன்னைப் பேசிக்கிறேன்' என்பது போல, மாணிக்கத்தை வெறித்துப் பார்த்தான் கண்ணன்.

ஆசிரியர் அதட்டும் குரலைக் கேட்டு வகுப்பறை அமைதியானது.

'தேர்வில்தான் தேறவில்லை, மதிப்பெண்களோ மிகவும் குறைவு. சுறுசுறுப்பாக உட்கார்ந்து நான் சொல்வதையாவது கேட்கக்கூடாதா? படிக்க வந்தவனுக்கு பகற் கனவு எதற்கு?'

மடித்துக் கிடந்த புத்தகத்தை எடுத்து விரித்து வைத்து ஆசிரியர் பேசத் தொடங்கினார்.

''மாணவர்களே! தண்டில் வளை யாதது தடியில் வளையுமா? என்பது

போல, ஐந்து வயதில் கற்பதற்கு விரும்பாத மனம், இருபத்தி ஐந்து வயதில் என்ன செய்யும்?''

போனகாலம் திரும்பி வராது! இந்தக் காலம் தான் உங்களுக்கு கவலையே இல்லாத காலம், வீட்டுப் பிரச்சினையோ, வெளி விவகாரங் களோ வராத காலம்.

கற்க வேண்டியதைக் கற்று, நிற்க வேண்டிய நியாய, நீதியான வழியில் நின்று, வாழ வேண்டிய புகழ் மிகுந்த வாழ்க்கையை வாழ்ந்தால்தான், உங்களுக்கும் பெருமை. உங்களைப் பெற்றெடுத்துப் பெரும் சிரமத்துடன் காக்கின்ற உங்கள் அன்பு பெற்றோர் களுக்கும் பெருமை.''

வகுப்பு முடிந்ததற்கான மணி நீண்டு ஒலித்து ஓய்ந்தது. ஆசிரியர்

கண்ணனைப் பார்த்து சிரித்தவாறு வெளியே சென்றார். மாணவர்கள் ஆசிரியர் கூறிய அறிவுரையைப் பற்றியே பேசினர். தாமும் அவ்வாறு வாழப் போவதாக உறுதி எடுத்தனர்.

ஆசிரியர் கூறிய எதுவும் கண்ணன் மூளையில் ஏறவே இல்லை. வீட்டின் மூலையிலேதான் அவனது நினைவு மொய்த்துக் கொண்டேயிருந்தது.

மற்ற மாணவர்கள் கிளம்புவதற்கு முன்னரே, தனது புத்தகங்களை தாறுமாறாக அள்ளிப் பையிலே போட்டுக் கொண்டு, வகுப்பறையை விட்டு, வில்லிருந்து அம்பு புறப்படு வது போல் வெளியே வந்தான்.

நடையிலே வேகம். நினைவிலே தாகம். வாயிலே விசில் எழுப்பிய சினிமாப் பாடலின் ராகம். வழியெல் லாம் எப்படித்தான் நடந்தானோ,

வழக்கத்திற்கு விரோதமாக கண்ணன் சீக்கிரமே வீட்டை வந்தடைந்தான்.

வீடு என்றதும், பெரிய மாடி வீடு என்று நினைத்து விடாதீர்கள். சென்னை நகரிலே, இருநூறு ரூபாய்க்கு எவ்வளவு பெரிய வீடு வாடகைக்குக் கிடைக்கும் என்று நீங்களே நினைத்துப் பாருங்கள்.

ஒரு பெரிய வீட்டில், பல குடும்பங்கள் குடியிருக்கும் ஒரு பகுதியைக் கடந்துதான் செல்ல வேண்டும்.

கண்ணன் மிகக் கவனமாக, பால் குடிக்கப் போகும் பூனை போல, மிகவும் நிதானமாக, காலடி வைத்து வீட்டின் உள்ளே நுழைந்தான்.

கண்ணீர் வழிய, கால்களை நீட்டி சுவற்றில் சாய்ந்தவாறு அவனது தாய் அமர்ந்திருந்தாள்.

என்னம்மா! ஏன் இப்படி அழுகிறீர்கள்? என்ன நடந்தது? என்று கண்ணன் பதறினானா? இல்லையே!

அலட்சியமாகத் தன் அன்னை யைப் பார்த்தபடியே வீட்டிற்குள் நுழைந்தான். சமயலறை பக்கம் போவதற்காக அடியெடுத்து வைக்க முயன்றான். ஏதோ சத்தம் கேட்டுத் திரும்பினான் கண்ணன்.

கண்ணனின் தாய் குபீரென்று பாய்ந்து அவனிடம் ஓடி வந்தாள். அவன் புத்தகப் பையைத் திறந்து புத்தகங்களை எடுத்தாள். விரித்தாள்.

எல்லாப் புத்தகங்களையும் விரித்துப் பார்த்தாகி விட்டது. அவள் எதிர்பார்த்த பொருள் அங்கு இல்லை. பெரிய ஏமாற்றம் எரிச்சலை உண்டு பண்ணியது.

கண்ணா!... கவலையில் மெல்லிய குரலில் தாயின் அழைப்பு.

ம்...! கண்ணனின் திமிரான குரலின் பிரிதி பலிப்பு.

பெருங்காய டப்பாவிலே போட்டிருந்த 5 ரூபாயைக் காண வில்லை, எடுத்தாயா நீ?

நான் ஏன் எடுக்கிறேன்? நீ பணம் எங்கே வைக்கிறாய் என்று எனக்கு எப்படி தெரியும்? வேறு வேலை இல்லையா உனக்கு?

வைப்பது என் வேலை. திருடிக் கொள்வது உன் வேலை. எனக்குத் தெரியும்! எங்கே அந்த பணம்?

''என்னம்மா! கேலி செய்கிறாயா? கண்ட இடத்தில் பணத்தைப் போட்டு விட்டு, கடைசியில் என்னையே கள் ளன்னு சொல்றே'' என்று ஆங்காரத் துடன் பதில் சொன்னான் கண்ணன்.

கட்டிட மேஸ்திரி நேற்றுக் கொடுத்த ரூபாயை நான் டப்பாவில் போட்டது உண்மைதான். காலையில் பார்த்தால் காணாமல் போய் விட்டதே! இந்த வீட்டில் நம் இரண்டு பேரைத் தவிர, வேறு யார் இருக்கிறாங்க?

அழுகையிலும் குழப்பத்திலும் தடுமாறிப் பேசினாள் தாய்.

"காலமெல்லாம் கஞ்சியைக் குடித்து விட்டு, நெஞ்சொடிய சிற்றாள் வேலை செய்து பிழைக் கிறேன். தகப்பன் இல்லாத உன்னை யும் படிக்க வைக்கிறேன். என் கஷ்டத்தைப் பாருப்பா!

என் கண்ணுல்லே! பணத்தை கொடுத்துடு. அது இருந்தாதான் அரிசி வாங்கி சமைக்க முடியும்..." கொஞ்சினாள் தாய்.

அரிசி வாங்கினாலும் சரி, நீ அரண்மனையையே வாங்கினாலும் சரி, எனக்கென்ன? நான் அந்த பணத்தை எடுக்கவே இல்லை.

அப்போ, நீ எடுக்கவே இல்லையா?

எடுக்கலே!, சத்தியமா எடுக்கலே!, சத்தியமா எடுக்கலே!, என் ஆணையா எடுக்கலே!, உன் ஆணையா எடுக்கலே!

தாயின் தலைமீது திடீரென்று அடித்து சத்தியம் செய்தான் கண்ணன்.

அடிப்பட்ட வேகம் தாங்காமல், அப்படியே உட்கார்ந்துவிட்டாள்.

தன் மகன் முரட்டுத்தனமாக அடித்தது பற்றிக்கூட, அவள் கவலைப்படவில்லை. திருட்டுத் தனத்தோடு வாழ்கிறானே, என்று அவள் மிகவும் வேதனையுடன் அழுதாள்.

தகப்பன் இல்லாத பிள்ளை என்று, தான் கொடுத்த செல்லத்தால் தான், அவன் கள்ளனாக வளர காரணமா யிற்றோ! அவள் குழம் பினாள். மேலும் வேதனை அடைந்தாள்.

கண்ணன் ஒரு முறை தாயைப் பார்த்தான். மறு வினாடி, சமயலறை யில் உள்ள அந்த 'மூலையை' திருட்டுத்தனமாகப் பார்த்தான்.

கண்ணன் முகத்தையே அவள் கண்கள் பார்த்துக்கொண்டிருந் தாலும், காலையில் நடந்த நிகழ்ச்சி அவள் மனத்திரையில் நிழற்படமாக ஓடிக் கொண்டிருந்தது.

வீட்டின் வாசலில் அரிசி விற்பவன் வந்து நின்றான். கையில் முறத்துடன் கண்ணணின் தாய் வந்து ஒரு படி அரிசி கேட்டு வாங்கிக் கொண்டு பணம் எடுக்க வீட்டிற்குள் சென்றாள்!

பெருங்காய டப்பாவை எடுத்துப் பார்த்தாள். பேரிடி அவ்ளுக்காகக் காத்திருந்தது. மனம் பகீரென்றது அவளுக்கு. படபடப்புடன் அங்கு மிங்கும் ஓடினாள். பணத்தைத் தேடினாள், பதறினாள், அழுதாள், அலறினாள்.

என்ன செய்து என்ன பயன்? போன ரூபாய் திரும்புமா?

அரிசி வியாபாரியோ அவசர மாகப் போக வேண்டும் என்று குரல் கொடுத்தான். ஒரு படி அரிசி விற்க இவ்வளவு நேரமானால் நான் உருப் பட்ட மாதிரிதான் என்று பக்கத்தில் உள்ளவர்களிடம் பேசிய வாறு மீண்டும் அவளை அழைத்தான்.

வேகமாக வந்த கண்ணனின் தாய், வியாபாரியை நோக்கி பணம் காணாமல் போனதை விம்மலுடன் கூறினாள்.

வேடிக்கை காட்டுறியா, இல்ல நாடகம் ஆடுறியா? என்னம்மா! வீட்டுக்குள்ளே அரிசி போனதாலே அப்படியே, விட்டுட்டுப் போயிடு வேன்னு பார்க்குறியா?

பணம் இல்லேன்னா பட்டினி கிடக்குறது! பச்சையா ஏன் பொய் சொல்லி பசப்பணும்? கொண்டா அரிசியை!

கொண்டு வந்தாள் அரிசியை. முரட்டுத் தனமாக முறத்தை வாங்கிய அவன், கூடைக்குள்ளே கொட்டிக் கொண்டான். அவளை ஏளனமாகவும் எரிச்சலாகவும் பார்த்துவிட்டுப் போய்விட்டான்.

அக்கம் பக்கம் உள்ளவர்கள் கண்ணனின் தாய் கமலத்தை ஒரு மாதிரியாகப் பார்த்தார்கள். வேறு, அவளுக்கு மானமே போய் விட்டது போல் இருந்தது.

ஏழை சொல்கிற உண்மையை நம்பக் கூட யாரும் இந்த உலகத்தில் தயாராக இல்லையே!

தலை குனிந்தவாறு வீட்டிற்குள் சென்று அழத் தொடங்கினாள். மாலை வரை அழுதுகொண்டேயிருந் தாள். வேலைக்கும் போக வில்லை. சாப்பிடவும் மனம் இல்லை.

'எல்லாம் என் தலை விதி' என்று அந்தப் பழியைத் தன் தலைமீது தாங்கிக் கொள்வதுபோல, தலை யிலே கை வைத்தவாறு கமலம் உட்கார்ந்திருந்தாள்.

அம்மா! எனக்குப் பசிக்குது! கண்ணன் கொஞ்சலாக கேட்டான்.

சமயலறைப் பக்கம்போ என்று கையை நீட்டினாள் கமலம்.

என்னதான் இருந்தாலும், தன் மகனை வெறுக்க ஒரு தாய் துணிவாளா! மத்தியானம் தனக்கு

இருந்த உணவை, தன் மகனுக்காக வைத்துவிட்டுப் பட்டினிகிடக்கின்றாளே!

இதனால் தானே, கைமாறு கருதாது கடமையாற்றும் தாயை எல்லோரும் தெய்வம் என்கிறோம்.

விறுவிறு என்று உள்ளே போய், சுறுசுறுப்புடன் செயல்படத் தொடங்கினான் கண்ணன், வாயும் கையும் எவ்வளவு வேகமாக வேலை செய்கின்றன!

சாப்பாட்டுக் காரியத்தை சமர்த்தாக முடித்துக் கொண்டு வெளியே வந்தான். தாயின் வேதனையோ, தன் வீட்டுத் தரித்திர நிலையோ அவனுக்குப் புரியவும் இல்லை. தெரியவும் இல்லை.

தாய்க்கும் உதவி செய்கிறேன் என்று கடைக்குச் சாமான்கள், காய்கறி வாங்கப் போகும் கண்ணன்,

முதலில் பைசா பைசாவாக மீதி பிடித்தான். பிறகு சாமான்களை குறைத்து வாங்கி, ஒரு ரூபாய் இரண்டு ரூபாய் என மீதிப் பிடித்தான்.

அதற்காகப் பொய் சொன்னான், அஞ்சாமல் அம்மாவை அதட்டினான். மீறினால் அடிக்கக்கூட முயன்றான். பிறகு, ரூபாயைத் திருடவே தொடங்கி விட்டான்.

திருடிய பணத்தை வைத்துக் கொண்டு பள்ளிக்குப் போகாமல் தெரு ஓரங்களில் காசு வைத்து கோலி விளையாடச் சென்றான்.

பள்ளிக்கூடம் போனாலும், மௌனசாமியார் போல உட்கார்ந் திருப்பான். பாடமும் ஏறாது. படிப்பிலும் ஒரு ஆர்வமும் இராது.

இவ்வாறு அம்மாவின் உழைப்பை ஏமாற்றிப் பெற்று, ஏய்த்து இன்பங் கண்டான் கண்ணன். தாயை ஏமாற்றினான் முதலில். இப்பொழுது

தன்னையே ஏமாற்றிக் கொண்டிருக்கிறான்.

சட்டையை மீண்டும் போட்டுக் கொண்டான். தாயோ அந்த இடத்தை விட்டு அசையவே இல்லை. அங்கிருந்து போனால் தானே தானும் ஏதாவது செய்யலாம்.

மெதுவாக, சமயலறை மூலைப் பக்கம் ஓரக் கண்ணால் பார்த்தான்.

தாயோ அந்த இடத்தை விட்டு அசையவே இல்லை. தானும் வெளியே போகப்போவதில்லை.

அங்கேயே இருந்தால் தாய் சந்தேகப் படுவாளே! எப்படி நேரத்தைப் போக்குவது?

புத்தகத்தைப் படிப்பதுபோல பாசாங்கு செய்ய வேண்டும்.

அறிவு தருவதற்கு உதவா விட்டாலும் அந்தப்புத்தகம் அவசரத் துக்கு உதவியது.

புத்தகம் விரிந்தாலும், கண்கள் அதன் மேல் படியவில்லை, சமைய லறை மூலையையே பார்த்தன.

கோழிக் குஞ்சுக்காக வட்டமிடும் கருடனின் பார்வையைப் போல, புத்தகத்தால் முகத்தை மறைத்துக் கொண்டு மூலையைப் பார்த்தான் கண்ணன்.

நேரம் ஆனதே தவிர, கமலம் அந்த இடத்தை விட்டு நகரவே இல்லை, தன் மகன் படிக்க புத்தகம் வைத்திருப் பதைக் கண்டாள், ஒருபுறம் வருத்தம் இருந்தாலும், மறுபுறம் மகிழ்ச்சி அடையத் தொடங்கினாள்.

சூரியன் மறைந்தான். இருள் வீட்டை சூழ்ந்து கொண்டது.

மண்ணெண்ணெய் விளக்கினை ஏற்ற கமலம் எழுந்திருக்க முயன்றாள். காலையிலிருந்து பட்டினி கிடந்த

உடம்பல்லவா! கால்கள் தள்ளாட எழுந்தாள்.

கமலம்..., கமலம்...

வாசலில் இருந்த அடுத்த வீட்டுப் பெண் ஒருத்திக் கூப்பிடும் குரல் கேட்டது. அவசரம் அவசரமாக வெளியே புறப்பட்டு போனாள்.

'இதோ வந்து விட்டேன்' என்று தாய் வெளியே புறப்பட்டதும், 'இதுதான் சரியான சமயம்' என்று நினைத்துக் கண்ணன் எழுந்தான்.

வாசலைப் பார்த்துக் கொண்டே மூலையை நோக்கிப் போகும் பொழுது திடீரென ஓர் சத்தம்.

வாசல் தடுக்கிடவே, கீழே தொப்பென்று விழுந்தாள் கமலம்.

'முன்னே பார்த்துப் போகாமல் என்னையே என்னப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்?' அதனால்தான் விழுந்தாய்!

தாயின் மீது சிறிதுகூட அனுதாபம் கொள்ளாமல் கேலியாகவும், கிண்டலாகவும், கண்ணன் பேசினான். பெற்ற தாயைத்தான் அவன் மதிப்பதே கிடையாதே!

'சனியன் தொலைந்தது' என்று தாய் வெளியே போய்விட்டதை அறிந்து, அந்த மூலையை நெருங்கி விட்டான்.

'5 ரூபாய் அதில்தான் இருக்கிறது. பத்திரமாக இருக்கும்' என்று சந்தோஷமாக ஒரு முறை கூறிக் கொண்டான். பணத்தை எடுத்துக் கொண்டு பறந்துவிட வேண்டியது தான்' என்று வேகமாய் மூலைக்குள் கையை விட்டான்.

சுரீர் என்றது கை விரல்களில்.

விட்டவேகத்தில் கையை வெடுக்கென இழுத்துக் கொண்டான்.

'விண் விண்' ணென்று வலி தெறிக்கத் தொடங்கியது, 'விஷம்' அல்லவா அவன் விரல்களிலிருந்து ஏறிக் கொண்டிருக்கிறது.

'ஐயோ அம்மா' என்று அலறினான் கண்ணன்.

மகன் அலறலைக் கேட்டு கமலம் ஓடிவந்தாள். அவளுக்கிருந்த பசி மயக்கம் எல்லாம் பறந்தோடிப் போனது போல ஓடி வந்தாள்.

'கையிலே ஏதோ கடித்து விட்டது. கடுக்கிறது என்று கத்தினான். மூலையைக் காட்டினான்.'

விளக்கைப் பொருத்தி எடுத்துக் கொண்டு ஓடிப்போய் பார்த்தாள் கமலம்.

ஐந்து ரூபாய் நோட்டின் மேல் படுத்திருந்த 'கருந்தேள்' ஒன்று மெதுவாக நடந்து போகத் தொடங்கியது.

அடுத்த வீட்டுக்காரர்கள் உதவியுடன் அந்தத் தேளை அடித்துக் கொன்று விட்டு, பணத்தை எடுத்தாள் தாய்.

பொய் சொன்ன வாய் புலம்பிக் கொண்டிருந்ததையும், களவு செய்த கண்ணனின் கை கருத்தேள் கொட்டித் துடித்துக் கொண்டிருந்ததையும் கமலம் கண்டாள்!

என்னைக் கேட்டால் தந்திருப் பேனே! ஏண்டா இப்படி செய்தாய்? என்று அந்த நிலையிலும், தன் மகனை அன்புருகக் கேட்டாள். அவனைக் கட்டிப் பிடித்துக் கொண்டு அழுதாள்.

விஷம் ஏறிக் கொண்டே இருந்தது. வீறிட்டலறினான் கண்ணன்.

'கருந்தேளாச்சே! மருத்துவ மனைக்குப் போனால்தான் நல்லது' என்று மற்றவர்கள் கூறினார்கள்,

சின்னக் குழந்தை ஓடுவதுபோல, கமலம் பதறிக் கொண்டே வெளியே ஓடினாள்.

தன்னுடைய தவறுகள் தெரிந்திருந்தும், தன்னைத் தண்டிக்காமல் எவ்வளவு அன்பு தன்மீது வைத்திருக்கிறாள் தாய் என்பது அப்பொழுது தான் கண்ணனுக்குப் புரிந்தது.

சைக்கிள் ரிக்ஷா கொண்டு வருவதற்காகத்தான் தன் தாய் சாலைக்கு ஓடியிருக்கிறாள் என்று அங்கே உள்ளவர்கள் பேசிக் கொண்டதையும் கண்ணன் கேட்டான்.

விஷம் ஏறிக் கொண்டேயிருந்தது. இனி, "தாய்க்கு நல்ல மகனாக வாழ வேண்டும். உதவிசெய்ய வேண்டும். பள்ளிக் கூடம் ஒழுங்காகப் போக வேண்டும்" என்று அழுதுகொண்டே

பிற்கால வாழ்க்கையைப் பற்றி முதல் முறையாக நினைத்தான் கண்ணன்.

‘ஐயோ என்ன நடந்தது?’ என்று எல்லோரும் சத்தமாகக் கேட்டதைத் திரும்பிப் பார்த்தான் கண்ணன்.

இரத்த வெள்ளத்திலே அவனது தாயைத் தூக்கி வந்து கொண்டிருந் தனர் சிலர்.

ரிக்ஷாவுக்காக, கமலம் கவலை யுடன் ஓடிக் கொண்டிருந்த பொழுது, எதிரே வந்த மோட்டார் சைக்கிள் மோதியதால், கால் எலும்பு முறிந்து விட்டது.

தனக்காகத் தன் தாய், தன் கால் களையே முறித்துக் கொண்டிருக் கிறாள் என்பதை உணர்ந்த கண்ணன், அவள் கால்களில் விழுந்து, தலையை மோதிக் கொண்டு, திருந்திட்

டேம்மா! திருந்திட்டேம்மா! இனிமேல் திருடவே மாட்டேன், பொய்சொல்லவே மாட்டேன்' என்று அழுதான்.

அந்த வேதனையிலும், 'இது போதுமடா என் கண்ணே' என்று ஆதரவாக அணைத்துக் கொண்டாள் கமலம்.

ஒருவருக்காக வந்த ரிக்ஷா, இருவரையும் ஏற்றிக் கொண்டு போனது.

கண்ணனின் கண்கள் குற்ற உணர்வால் கண்ணீரைப் பெருக்கியது தாய் கமலத்தின் கண்களிலும் கண்ணீர் பெருகியது.

ஆனந்தக் கண்ணீர்தான். ஆமாம்! பணம் தந்த பரிசல்லவா! தன் மகன் திருந்திவிட்டதல்லவா அவள் பெற்ற பெரிய பரிசு!

## 2. தூக்கம் தந்த பரிசு!

'கண கண' வென்று சங்கீத இசை பாடி கடிகாரம் தன் கடமையைச் செய்தது.

மடாரென்று அதன் மண்டையிலே ஒரு மரண அடி. அடித்துக் கொண்டிருந்த கடிகாரத்தின் தொண்டை அடைத்துக் கொண்டது.

மரண அடி தந்த இடது கைக்குச் சொந்தக்காரன் மணி. புரண்டு படுத்துக் கொண்டான். போர்வையை நன்றாக இழுத்து முகத்தைப் போர்த்தி, மீண்டும் உடலை குறுக்கிக் கொண்டு தூங்க ஆரம்பித்தான்.

மணியின் தந்தை மனோகரன் வந்தார்.

மணி, மணி என்று அழைத்தார்.

'ம்' என்று முனகினான் மணி.

நேரமாகிவிட்டது எழுந்திரு!

'இன்னும் கொஞ்ச நேரம்பா' என்றவாறு கெஞ்சினான் மணி.

'நான் வெளியே அவசரமாகப் போகிறேன், வர அதிக நேரமாகுமே! என்ன செய்யப் போறே?'

"நான் பார்த்துக்குறேன்பா..." போர்வைக் குள்ளேயிருந்து முகத்தைக் காட்டாமலேயே பதில் சொன்னான் மணி.

வெளியிலே கார் புறப்படும் ஒலி கேட்டது. தாய் ஏதோ தன் தந்தையிடம் பேசுவதும் அவனுக்கு இலேசாகக் கேட்டது.

மீண்டும் புரண்டு படுத்தான் மணி.

நன்றாகத் தூக்கம் வருவது போல் இருந்தது. அப்படியே படுத்து இருப்பது மிகவும் இன்பமாகவும் இருந்தது மணிக்கு.

இப்படித் தூங்குகிறானே, 'நேரம் ஆகிவிட்டதே' என்று மேஜை மேல் இருந்த கடிகாரத்திற்கு 'பக்பக்' என்றது. பாவம், அது 'டக்டக்' என்ற சத்தத்துடன் எழுப்பத் துடித்தது.

அப்பாவுக்கே பயப்படாதவன். அலாரத்திற்குப் பயப்படுவானா? எப்படியோ போகட்டும் என்று பெரியமுள் வேகமாகப் போகத் தொடங்கியது. போர்வைக்குள் ளிருந்து குறட்டை ஒலி, ராகம் போல வந்து கொண்டிருந்தது.

தரையே அதிர்வது போல ஒரு பெண் அந்த அறைக்குள் வந்தாள். காலையில் அந்த அறைக்குள் நுழைபவள் 'பர்வதம்' என்ற வேலைக்காரியாகத்தான் இருப்பாள்.

'பர்வதம்' என்றால் மலை யல்லவா! அவள் உடலும் அப்படித்

தான். யானை அடியெடுத்து வைப்பது போலத்தான் நடப்பாள்.

பர்வதம் அந்த அறையைக் கூட்டத் தொடங்கினாள். வெண்கலக் கடை யிலே யானை புகுந்தது போல ஒரே சத்தம்.

அலாரத்தை விடக் கடுமையாக இருந்தது அவள் எழுப்பிய சத்தம். திடுக்கிட்டு விழித்தான் மணி.

'போகப் போறியா இல்லையா'? வெறி கொண்டவன் போல மணி கத்தினான்.

'சோம்பேறி' என்ற நல்ல வார்த்தையை 'சோமாறி' என்று கூறி அவனை மனத்துக்குள்ளே வைது விட்டுப் நகர்ந்தாள் பர்வதம்.

மீண்டும் புரண்டு படுத்தான் மணி. 'ஏழு மணியாகிவிட்டது' எழுந்திரு மணி! என்று எழுப்ப நினைப்பது

போல சுவர்க் கடிகாரம் ஏழு சத்தம் போட்டு ஓய்ந்தது. அது அவனது காதில் விழுந்தாலும் கருத்தில் பதிய வில்லை.

மணியின் அன்னை அருகில் வந்து நின்றாள். முகம் போர்த்தித் தூங்கு வது தவறு என்று பல முறை கூறியும் கேளாத மகனை எழுப்பினாள்.

'**முகத்தை மூடிக் கொண்டு தூங்குவது தவறு'. அது களைப்பைக் கொடுத்து, சோம்பலை வளர்த்து, சுகாதரத்தையே கெடுத்துவிடும். எழுந்திரு மணி**' என்றாள்.

இன்னும் கொஞ்ச நேரம் தூங்கு றேம்மா! சரியா எட்டு மணிக்கு எழுந்தால் போதும். தயவுபண் ணும்மா! கொஞ்சுவது போல அம்மா விடம் கெஞ்சினான்.

தாயின் மனம் இளகிவிட்டது. தலையை ஆட்டினாள். எட்டு

மணிக்கு வருகிறேன் என்று சமையலறைப் பக்கம் திரும்பிய தாய், மீண்டும் மணியிடம் வந்தாள்.

நிம்மதியாகத் தூங்கலாம் என்று புரண்டு பார்த்தான் மணி. அசதியாக இருந்ததேயொழிய, தூக்கமே வர வில்லை. அப்படியே போர்த்திய படியே படுத்திருந்தான்.

பத்து மணிக்கு அவனுக்கு ஒரு வேலை இருந்தது. அதாவது, ஒரு அலுவலகத்தில் நேர்முக தேர்வு (இன்டர்வியூ) இருந்தது.

பத்து மணிக்கு இன்னும் எவ்வளவோ நேரம் இருக்கின்றது அம்மா! அதைத்தானே கூறவந்தீர்கள்! என்று அம்மாவுக்கு முந்திக் கொண்டான் மணி.

'வேலைக்குப் போகிறவனுக்கு நேரம் தெரியாதா' என்று தாயும் தன்

வேலையைப் பார்க்கப் போய் விட்டாள்.

'எழுந்திரப்பா, எட்டு மணி ஆகி விட்டது, என்பது போல சுவர்க் கடிகாரம் அடித்து ஒலித்தது. சொகு சான தூக்கம் இப்படி கலைக்கப்பட்டு விட்டதே என்று கடுப்புடன் எழுந்தான் மணி. எப்பொழுதும் அவன் காலை ஒன்பது மணிக்கு எழுந்துதான் பழக்கம்.'

ஆறு மணியிலிருந்து இப்படித் தூக்கம் கலைந்து விட்டதால், அவனுக்கு ஏகப் பட்ட கோபம். அதே வேகத்துடன், எழுந்து, காலைக் கடன்களை முடித்து விட்டுக் குளியலறைப் பக்கம் போனான்.

அங்கே ஒரு பெரும் அதிர்ச்சி அவனுக்காகக் காத்திருந்தது.

'குழாய் சுத்தம் செய்யும் வேலை இருப்பதால், காலை எட்டு மணி வரைதான் தண்ணீர் வரும். அதற்கு முன்னால் தேவையான நீரைப் பிடித்து வைத்துக் கொள்ளுங்கள்' என்று மாநகராட்சி கொடுத்திருந்த பத்திரிக்கை அறிவிப்பின்படி, குழாயில் தண்ணீர் வரவில்லை.

'படித்திருந்தும், அந்த அறிவிப்பை மறந்து போய் விட்டேனே. என்று தன் மண்டையில் ஒரு தட்டு தட்டிக் கொண்டான் மணி.'

இதற்குள் எட்டரை மணி ஆயிற்று.

எப்படியும் குளித்தாக வேண்டும்! என்ன செய்வது? ஓடினான் கிணற்றை நோக்கி.

'வீட்டு வேலைகளை முடித்து விட்டு வேலைக்காரி போய்விட்

டாள். வேலைக்காரனோ காய்கறி வாங்கப் போய்விட்டான்' என்று தாய் சமையலறையிலிருந்து குரல் கொடுத்தாள்.

'சரி நானே இழுத்துத் தொலைக் கிறேன்' என்று முணுமுணுத்தவாறே, முதல் முறையாக வாளியை கிணற்றில் இறக்கித் தண்ணீர் மொண்டு இழுக்கத் தொடங்கினான்.

கைகள் எரிச்சல் கொள்ளத் தொடங்கின. என்றாலும் கஷ்டப் பட்டுக் கொண்டே, 'குளித்தேன், என்ற பெயருக்காகக் குளித்தான்.'

தன் அறைக்கு வந்து வேறு உடை களை மாட்டிக் கொண்டு தயாராகிய பொழுது, மணி எட்டே முக்கால் ஆகிவிட்டது.

'அம்மா! நேரமாகிவிட்டது. எனக்கு சாப்பாடு வேண்டாம். காபி மட்டும் போதும்' என்று கத்தினான் மணி.

'காபி ஆறிப் போனதால், வேலைக்காரி பர்வதம் குடித்து விட்டுப் போய்விட்டாள். சமையல் முடிய இன்னும் 10 நிமிடம் ஆகும். கொஞ்சம் பொறு' என்றாள் தாய்.

'காபியும் கிடையாதா? சரியம்மா! நான் போய் ஓட்டலில் சாப்பிட்டுக் கொள்கிறேன்' என்று தனக்கு சமாதானம் கிடைப்பது போல சொல்லிக் கொண்டே, கார் இருக்கும் இடத்திற்கு ஓடினான்.

கார் இல்லை. பகீரென்றது மணிக்கு.

'காரைத்தான் அப்பா காலையிலே எடுத்துக் கொண்டு போவதாகச் சொன்னாரே' என்பது அப்பொழுது தான் நினைவுக்கு வந்தது.

நேரம் ஆகிக் கொண்டே இருந்தது.

நேர்முகத் தேர்வுக்கான முழுக் கால் சட்டைபோட்டு, முழுக்கை

சட்டையை உள்ளே திணித்துக் கொண்டு, 'டை' கட்டிக்கொண் டான். கண்ணாடி முன்னால் நின்று கொண்டு அழகு பார்க்கக்கூட அவனுக்கு நேரமும் இல்லை. அமைதியான மனமும் இல்லை.

கார் இல்லையே என்ன செய்வது?

வேலைக்காரன் வேதாரண்யம் காய்கறிகளைச் சுமந்தவாறு மெது வாக வந்து கொண்டிருந்தான்.

'ஓடிவா சீக்கிரம், என்று கத்தினான் மணி, வழக்கம் போல மெதுவாக, சாவகாசமாக வந்து கொண்டிருந்தான் வேலைக்காரன்.

மணி முன்னால் ஓடி, அவன் முன்னே போய்நின்று 'வாடகைக் கார்' கொண்டுவா என்றான்.

வேதாரண்யத்திற்கு ஒன்றும் புரிய வில்லை. இரவில் இரண்டு மணி

வரை சினிமா பார்த்துவிட்டு, காலை எட்டு மணிவரை தூங்கிவிட்டு, இப்பொழுது என்ன அவசரம்?

உடனே 'இன்டர்வியூவு' க்குப் போகனும். சரியாக பத்து மணிக்கு நான் அங்கே இருக்கனும். சீக்கிரம் போய்வா...'

நம்ப நாட்டில் பத்துன்னா பதினோரு மணிக்குத் தான் இருக்கும். பதட்டப்படாம போகலாம் தம்பி!

'போப்பா! இது வெள்ளைக் காரன், கம்பெனி... நல்ல உத்தி யோகம். நிச்சயம், எனக்குத்தான் கிடைக்கும். சீக்கிரம் போய் 'டாக்சி' கொண்டு வாயேன்' என்று அவசரப்படுத்தினான் மணி.

வேலைக்குப் போகிற குழந்தை! விடியற்காலமே எழுந்திருக்கக் கூடாதா? இன்னும் ஒன்னுமே சாப்பிடலியே!

'பரிதாபமா, இல்லை பரிகாசமா! வேலையைப் பாருப்பா... மணி மனங்குமுறிக் கொண்டிருந்தான்.'

நேரம் ஆகிக் கொண்டேயிருந்தது.

அங்குமிங்கும் நடை போட்டு அலைந்து கொண்டிருந்த மணியை நோக்கி வேதாரண்யம் வந்தான்.

ஏன்பா! ஏன் தனியே வர்ரே?

'பெட்ரோல் விலை ஏறிப்போச் சாம், மீட்டர் கட்டணத்தை உயர்த்தனும்னு டாக்சி முதலாளி யெல்லாம் போராட்டம் நடத்தப் போறதுக்கு முன்னாலே, ஒரு அடை யாள வேலை நிறுத்தம் செய்யனும்னு முடிவு செய்தாங்களாம், அதனால் சாலையில் ஒரு வண்டி கூட ஓடவே இல்லை!'

ஐயையே! அடிவயிற்றைப் பிடித்துக் கொண்டு கத்தினான் மணி.

நேரம் ஆகிக்கொண்டேயிருந்தது.

வேதாரண்யா! அவன் குரல் கெஞ்சலில் வந்து நின்றது. 'போய் என் சைக்கிளை எடுத்துகிட்டு வா! சீக்கிரமா போயிடுறேன், என்று சொல்லிவிட்டு வேதாரண்யத்திற்கு முன்னே ஓடினான் மணி.'

புழுதியடைந்து கிடந்த அந்த சைக்கிளின் இரண்டு சக்கரங்களும் ஏழையின் கன்னங்கள் போல் ஒட்டிக் கொண்டு கிடந்தன.

பகீரென்றது மணிக்கு. 'பஞ்சராக கிடக்கிறதே! சைக்கிளும் சதி செய்து விட்டதே' எப்படி நான் போய் சேருவேன்?' மணி ஒப்பாரி வைக்காமல் புலம்பினான்.

நாதசுவரத்துக்கு ஒத்து ஊதுவது போல வேதாரண்யமும் ஒத்து ஊதினான்.

'அரசு பேருந்துதான் கடைசிப் புகலிடம் என்று யோசனை கூறினான் வேதாரண்யம்.'

அவசரம் அவசரமாக சான்றிதழ் களை அள்ளிக் கொண்டு. 'பேருந்து' நிற்குமிடத்துக்குப் பறந்தான் மணி.

அன்றைக்கு அறுபத்துமூவர் திரு விழாவாம். பட்டணத்து மக்களில் பாதிக்கூட்டம் அங்குதான் இருந்தது.

மலையிலே தெரியும் ஒற்றை யடிப் பாதையைப் போல வரிசை நீண்டு நின்றது.

எச்சிலை விழுங்கினான் மணி. கண்கள் மூடி மூடித் திறந்தன. 'எப்படி பஸ் ஸுக்குள் ஏறப் போகிறாய்' என்று மனம் கேட்டு அவனை பயமுறுத்தியது.

பஸ் வந்து ஓர் பயங்கர உறுமலுடன் நின்றது. எறும்புபோல வரிசையாய் நின்ற மக்கள், இப்பொழுது

தேனீக்கள் போல் 'ஏறுமிடத்தில்' பஸ் வாசலில் மொய்த்துக் கொண்டு நின்றனர்.

ஆறறிவு படைத்த மக்கள் அனைவரும், பட்டிக்குள்ளே ஆடுகள் நுழைவது போல, முண்டியடித்துக் கொண்டு உள்ளே செல்ல முயன்றனர்.

பஸ்ஸுக்குரிய கட்டணம் ஒரு கையிலும், சான்றிதழ் உள்ள பையை மற்றொரு கையிலும் பிடித்திருக்க, மணியும் ஏற முயன்றான்.

அவன் பஸ்ஸுக்குள் ஏறவில்லை. கூட்டத்தின் இடையிலே வசமாக சிக்கிக் கொண்ட அவன் கூட்டத்தால் வாசலுக்குள் நுழைக்கப் பட்டு, திணிக்கப்பட்டான்.

உடல் நசுங்கி, உடை கசங்கி, மூச்சுத் திணறி, மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க உள்ளே எப்படியோ வந்து விட்டான்.

உள்ளே வந்து நிற்கவாவது இடம், கிடைத்ததே என்று மகிழ்ச்சி. இருந்தாலும், உடையைப் பார்த்த பொழுது, கீழே உட்கார்ந்து ஒரு முறை அழ வேண்டும் போல் தோன்றியது அவனுக்கு.

பஸ்ஸிலே உட்கார்ந்து பத்துபேர் முன்னால் அழ முடியுமா?

பயணச் சீட்டைப் பெற்றுக் கொண்டு, உட்கார இடங்கிடைக்காமல், மேலே உள்ள கம்பியைப் பிடித்துக் கொண்டு, வௌவால் போல் தொங்கியவாறு பயணம் செய்தான்.

நேரம் ஆகிக்கொண்டேயிருந்தது.

'பத்து மணிக்குள்ளே இந்த பேருந்து போய் சேர்ந்துவிட வேண்டும்' என்று பெயர் தெரிந்த அத்தனையையும் கடவுளிடமும் வேண்டிக் கொண்டான்.

இரவு சினிமாவுக்குப் போகாமல் இருந்திருந்தால், காலையிலே சீக்கிரம் எழுந்திருந்தால், இப்படி ஒரு துன்பம் வந்திருக்காதே! அழகாக அப்பாவின் காரிலேயே போயிருக்கலாமே, என்று அவன் மனம் தானே பேசிக் கொண்டது.

அவனுடைய நல்ல காலம். சரியாகப் பத்து மணிக்குபோய் அவன் இறங்குமிடத்தில் பஸ் நின்றது மணியும் இறங்கினான்.

உள்ளே போவதற்குரிய வழி தெரியாமல் அந்தக் கம்பெனியின் சரியான வழியைக் கண்டு பிடிக்க முயற்சிப்பதற்குள், கால் மணி நேரம் கடந்துவிட்டது.

தன் முடியைத் திருத்திக் கொண்டு உடையை சரிபார்த்துக்கொண்டு,

உரிய இடத்தை அடைவதற்குள் பத்தரை மணி ஆயிற்று.

முகத்தில் முத்து முத்தாய் வியர்வை கொப்பளிக்க உள்ளே நுழைந்தான். அலுவலக சிப்பந்தி அவனைத் தடுத்தான்.

''பத்து மணிக்குள்ளே வந்தவர் களுக்கு மட்டும்தான் உள்ளே போக அனுமதி உண்டு.''

என்று சிப்பந்தி ஏளனமாக சிரித்துக் கொண்டே சொன்னான்.

மணிக்கு வயிறு பற்றி எரிந்தது.

கெஞ்சிப் பார்த்தான் மணி. கெஞ்சியது தான் மிஞ்சியது.

"கம்பெனி சட்டத்தை மீற முடியாது" என்று அந்த சிப்பந்தி கோபமாகக் கூறிய பொழுதுதான் மணிக்கு புத்தியில் உறைத்தது. மனப்

புழுக்கத்துடன் திரும்பினான் வீடு நோக்கி.

இது வரை ஒன்றும் சாப்பிட வில்லை யாதலால், பக்கத்திலே உள்ள வெற்றிலை பாக்குக் கடைக்குச் சென்று குளிர்ந்த பானம் ஏதாவது அருந்தலாம் என்று நடந்தான் மணி.

வயிறு குளிர்ந்தது, வாய் நனைந்தது குளிர் பானத்தால். அடுத்து, பானத்திற்குரிய பணம் தரவேண்டுமே?

முழுக்கால் சட்டையின் பின் பக்கப் பாக்கெட்டில் கையை விட்டான். பணப்பை (மணிப்பர்சு) அங்கே இல்லையே! கூட்டத்தில் எவனோ கொண்டு போய் விட்டானே!

கையிலே காசு இல்லாது கலங்கினான் மணி. தன்னிடம் காசு

புழுக்கத்துடன் திரும்பினான் வீடு நோக்கி.

இது வரை ஒன்றும் சாப்பிட வில்லை யாதலால், பக்கத்திலே உள்ள வெற்றிலை பாக்குக் கடைக்குச் சென்று குளிர்ந்த பானம் ஏதாவது அருந்தலாம் என்று நடந்தான் மணி.

வயிறு குளிர்ந்தது, வாய் நனைந்தது குளிர் பானத்தால். அடுத்து, பானத்திற்குரிய பணம் தரவேண்டுமே?

முழுக்கால் சட்டையின் பின் பக்கப் பாக்கெட்டில் கையை விட்டான். பணப்பை (மணிப்பர்சு) அங்கே இல்லையே! கூட்டத்தில் எவனோ கொண்டு போய் விட்டானே!

கையிலே காசு இல்லாது கலங்கினான் மணி. தன்னிடம் காசு

இல்லையென்று கூறி, களவுபோன தன் கதையைக் கூறினான். கடைக்காரனோ நம்பவே இல்லை. நம்புவானா அவன்?

கையிலே இருந்த மோதிரத்தை அவனிடம் கழற்றிக் கொடுத்து, நாளை வந்து வாங்கிக்கொள்கிறேன் என்று நடந்தான்.

மனதில் ஒரே குழப்பம். சிந்தனை செய்யக்கூட அவன் மனம் தயாராக இல்லை.

நடந்தே வீட்டுக்குப் போகலாம் என்பது தான் அவன் முடிவு. காலை வெயில் சுளீரென்று முகத்தில் அடித்தது. பசித்துக்கிடக்கும் வயிறு துடித்தது. கம்பெனியில் தனக்குரிய வாய்ப்பை இழந்த நிலைவேறு அவனை வாட்டியது.

அவனால் நடக்க முடியவில்லை. எதிரில் இருந்த பூங்கா ஒன்றைப் பார்த்தான். சிறிது நேரம் படுத்து, ஓய்வு எடுத்துக் கொண்டால், பிறகு வீட்டிற்கு எப்படியும் போய் விடலாம் என்று நினைத்தான்.

ஒரு படர்ந்த பெரிய மரத்தின் நிழலில் இருந்த ஒரு நீண்ட பெஞ்சில் தன் சான்றிதழ்கள் உள்ள பையை தலைக்குத் தலையணையாக வைத்துக்கொண்டு, காலை நீட்டிப்படுத்தான். களைத்த கால்களுக்கு இதமாக இருந்தது. குளிர்ந்த காற்றும் சுகமாக வீசியது.

மணி, அப்படியே தூங்கிப் போய் விட்டான். எவ்வளவு நேரம் தூங்கினானோ அவனுக்கே தெரியாது!

'எழுந்திருடா தடிப் பயலே! தூங்குவது போல பாசாங்கா செய்கிறாய்! தோலை உரித்துவிடு

வேன். உண்மையைச் சொல்' என்று போலீஸ்காரரின் கைத்தடி, மணியின் முதுகில் விழவும் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்து நின்றான் மணி.

என்ன பேசுவது என்றே தெரியாமல் நின்ற மணியின் கழுத்தைப் பிடித்துத் தள்ளியவாறு, காவல் நிலையத்திற்கு அழைத்துச் சென்றார் போலீஸ்காரர்.

'ஐயா வெளியில் போயிருக்கிறார். உள்ளே இரு' என்று ஒரு அறைக்குள்ளே அனுப்பி வைத்தார் தலைமைக் காவலர். மணிக்கு இன்னும் ஒன்றுமே புரியவில்லை.

தன் சட்டைப் பைக்குள் அந்த சங்கிலி எப்படி வந்தது? தன் சட்டைப் பைக்குள் அந்த சங்கிலி இருக்கிறது என்று போலீசுக்கு எப்படித் தெரியும்?

மணி யோசித்து யோசித்துப் பார்த்தான். எதுவுமே அவன் நினைவுக்கு வரவில்லை. அந்தப் பலகையில் படுக்கிற வரைதான் நினைவுக்கு வருகிறது. அதற்குப் பிறகு எதுவுமே புரியவில்லை.

திருடன் ஒருவன் ஒரு குழந்தையின் சங்கிலியைப் பறித்துக் கொண்டு ஓடிவர, அவனைப் போலீஸ்காரர்கள் துரத்த, அவன் பூங்காவிற்குள் நுழைந்து, மணியின் பைக்குள் போட்டு விட்டு ஓடியது தூங்கிய மணிக்கு எப்படித் தெரியும்!

தன்னைப் பற்றியும் தன் முகவரியைப் பற்றியும் கூறக்கூட அந்த காவலர்கள் விடவில்லை.

பசி அவனைத் தின்று கொண்டிருந்தது.

மாலை நான்கு மணியாயிற்று. இதற்குள் பலமுறை ஏதாவது

சாப்பிட்டிருப்பான் மணி. இவ்வளவு நேரம் ஒரு அறைக்குள்ளே இருந்ததும் இன்று தான்.

சுவற்றில் சாய்ந்தான் தன்நிலையைப்பற்றி யோசித்தவாறு, கண்கள் மூடிய நிலையில் உட்கார்ந் திருந்தான் மணி.

'டக் டக்' என்ற சத்தம் கேட்டு விழித்தான் மணி. எதிரே இன்ஸ் பெக்டர் நின்று கொண் டிருந்தார்.

டேய் மணி! 'நீயாடா?' நீ எங்கேடா இங்கே வந்தே!

தலைமைக் காவலர் அவனைப் பற்றிய குற்றச் சாட்டைக் கூறினார். மணியின் கண்களோ கண்ணீரை உகுத்துக் கொண்டிருந்தன.

இன்ஸ்பெக்டர். அவர் அழைத்துக் கொண்டு, மணியின் வீட்டுக்குப்

போனார். மணியின் தந்தையும் இன்ஸ்பெக்டரும் நெருங்கிய நண்பர் களாயிற்றே!

மணியின் தந்தை மனோகரன், காலையிலிருந்து எல்லா நிகழ்ச்சி யையும் கூறும் படி கேட்டார். மணியும் திக்கித் திக்கிக் கூறினான். இன்ஸ்பெக்டர் சிரித்துக் கொண்டே கேட்டார்.

இத்தனைக்கும் காரணம் மணியின் சோம்பல்தான். ஒரு காரியம் என்றால் ஒருவன் எப்பொழுதும் ஆயத்தமாக இருக்கவேண்டும். அசட்டையாக இருப்பதும், அலட்சியப் படுத்து வதும், அகம்பாவமாக தன்னால் எதுவும் முடியும் என்று நினைப்பதும் தான் எல்லாத் துன்பத்திற்கும் காரணம்.

எவன் ஒருவன் காலையில் விழிக்கிறானோ, அவனே காரியங்கள் அனைத்தையும் நினைத்து, அவைகளுக்காகத் திட்டமிட்டு நடப்பான். அதிக நேரம் தூங்குபவன், அவசரத்துடன் எழுந்து அலங்கோலமாக காரியங்கள் செய்வதால்தான் அவதிக்கு உள்ளாகிறான்.

**'சோம்பல் உள்ளவர் தேம்பித் திரிவார்'** என்பது பழமொழி. மணிக்கு வந்த தண்டனையைப் பார்த்தீர்களா?

தன் தவறை மணி உணர்ந்தான். இது போல் இனி தூங்கமாட்டேன் என்று தந்தையிடம் உறுதி கூறினான். தனக்கு உதவி செய்த இன்ஸ்பெக்டருக்கு நன்றி கூறினான்.

விருந்து வைத்தார் மனோகரன். இன்ஸ்பெக்டருக்கு மட்டுமல்ல, மணிக்கும்தான். காலையிலிருந்து அவன் பட்டினியல்லவா!

பசித்துப் புசி என்பதற்கிணங்க, ருசித்துப் புசித்தான் மணி. புத்தி வந்த புது மனிதனாக தந்தையைப் பார்த்து புன்னகை புரிந்தான்.

வேலை போனாலும் பரவா யில்லை, சோம்பல் மூளை போயிற்றே என்று மனம் மகிழ்ந்தார் மனோகரன். ஆமாம் என்பது போல சுவர்க் கடிகாரம் ஆறு முறை அடித்து ஆமோதித்தது.

# 3. அன்பு தந்த பரிசு!

மாலை நேரத்து மஞ்சள் வெயிலில் அந்தக் கிராமம் குளித்துக் கொண்டிருந்தது.

காலையிலே காட்டுக்கு மேயப் போன ஆடுகளும் மாடுகளும், கழுத்தில் மணியோசை குலுங்க அசைந்தாடி நடந்து கொண்டிருந்தன.

வேலைக்குப் போனவர்கள் வீட்டை நோக்கி வேகமாக நடை போட்டனர். பறவைகள் பறந்து மரங்களில் அமரும் சத்தம் வேறு அந்த நேரத்தை ஆரவாரப் படுத்திக் கொண்டிருந்தது.

சிங்காரமோ, அந்தக் கிராமத்தையே பார்த்தவாறு நின்றுகொண்டிருந்தான்.

ஊருக்குள் போகலாமா? அல்லது இப்படியே திரும்பி போய்விட

லாமா? குழம்பிய மனதை அவன் முகம் தெளிவாகக் காட்டியது.

பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு வருகிறான் அவன். அது சிங்காரத்தின் சொந்த ஊர். தாயும் தந்தையும், உற்றாரும் உறவினரும், நண்பர்களும் அன்பர்களும் வாழ்கின்ற இடம்.

ஊருக்குள் நுழைவதற்கு என்ன தயக்கம்? உள்மனத்திலே ஏதோ உறுத்தல்!

அந்த ஆற்றைக் கடந்து விட்டால் ஊர் வந்து விடும். எல்லோரையும் பார்க்கலாம், பேசலாம், பழகலாம், மகிழலாம்.

மணலிலே நடை போட்ட அவன், அந்த ஓர் இடம் வந்ததும் அப்படியே அமர்ந்து விட்டான்.

கையிலே மணலை அள்ளிப் பார்த்தான். ஆமாம்! 'இதே இடந் தான்'! இதே மணல் மேடுதான்...!

மணல் மீது புரண்டு, மனம் போல்திரிந்து, மற்ற சிறுவர்களுடன் ஓடி ஆடிய நினைவுகள் அலை அலையாக அவனது நினைவுக்குள் வந்தன.

மகிழ்ச்சி ஒருபுறம். மனவேதனை மற்றொருபுறம். அவன் மனம் பழைய நிகழ்ச்சிகளை எண்ணிப் பார்க்கத் தொடங்கியது.

அவன் பெற்றோருக்கு அவன் ஒரே மகன். நஞ்சை நிலம் நான்கு ஏக்கர் உண்டு. வசதியான குடும்பம்.

இவ்வளவு இருந்தால் போதாதா ஒருவனுக்கு!

தாயின் செல்லம் சிங்காரத்தைத் தறுதலையாக்கி விட்டது.

தந்தையோ அவனைக் கண்டிப் பதே இல்லை. 'தான் வைத்ததே சட்டம்' என்று தலைகொழுத்துத்

திரிவதில் அவனுக்கு நிகர் யாரும் அந்தக் கிராமத்திலே கிடையாது என்று திரிந்தான்.

தன்னோடு ஒத்த சிறுவர் கூட்டத்திற்கு அவனே தலைவன். அவன் இட்டதே சட்டம். கொண்டதே கொள்கை.

யாரும் அவனுக்கு அறிவுரை கூறக் கூடாது. அவ்வாறு கூறினால் கேட்டுக் கொண்டேயிருந்து விட்டு, அவர்களை ஏளனமாகப் பார்த்து, இகழ்ச்சியாகப் பேசி விட்டுப் போய்விடுவான்.

பள்ளிக் கூடம் போன நேரம் போக, அவனுக்கு அந்த ஆற்றின் மணல்மேடுதான், அவன் நடத்தும் காரியங்களுக்கு மேடையாகத் திகழ்ந்தது.

அத்தனை சிறுவர்களும் அவன் சொல்லுக்கு மறு சொல் பேசமாட்டார்கள். சொன்னதைச் செய்வார்கள். அவன் தருவதை உண்பார்கள்.

அதில் சந்திரன் என்பவன் மட்டும் விதிவிலக்காக இருந்தான். சிங்காரத்தை அவனுக்குப் பிடிக்கும். ஆனால் அவனுடைய தலைக்கன மான பேச்சும், தாறுமாறான போக்கும் அவனுக்குப் பிடிக்கவே பிடிக்காது.

தவறு செய்தால், நிச்சயம் தட்டிக் கேட்பான்.

தான் தவறுக்கு உள்ளானால், யாராவது தன்னை அடித்துவிட்டால் கூட, மீண்டும் அவரைத் திருப்பி அடிக்காத வரை அவன் உறங்கவே மாட்டான். யானை போல குணம் கொண்டவன் சிங்காரம்.

கிராமம் என்றால் விளையாட்டு களுக்கா குறைச்சல்!

கிட்டிப்புள் ஆட்டத்தில் தொடங்கி, பம்பரமாகச் சுற்றி, கோலிக் குண்டுகளுடன் உருண் டோடி, சடுகுடுப் போட்டிக்கு வந்து சவால் விட்டு ஆடும்வரை அவர் களுக்கு சலிக்கவும் சலிக்காது.

அப்படித்தான், அன்றும் அந்த மணல் மேடையில் சடுகுடு ஆட்டம் தொடங்கியது.

வழக்கம் போல் சிங்காரம் ஒரு குழுவுக்குத் தலைவனாகவும், சந்திரன் மற்றொரு குழுவிற்குத் தலைவனாகவும் இருந்தனர்.

ஆட்டத்தில் தோற்றவர்கள் வெற்றி பெற்றவர்களைக் குதிரை ஏற்றிக் கொண்டு, அந்த ஆற்று மணலில்

அரை கிலோமீட்டர் தூரம் நடக்க வேண்டும் என்பது பந்தயம்.

ஆகவே, தோற்றுப் போவதற்குத் துணிந்தாலும், ஆளைத் தூக்கிப் போவதற்கு வெட்கப்பட்ட அனைவரும், அன்றைய ஆட்டத்தில் அதிக அக்கறை காட்டினார்.

முரட்டுத்தனமும், முன் கோபியாகவும், சண்டைப் போடுவதில் சண்டைப் பிரசண்டனாகவும் விளங்கிய சிங்காரத்தைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ!

சிங்காரம் அன்று நெருப்பாக இருந்து ஆடினான்.

எப்பொழுதும் வெற்றி பெறும் சிங்காரத்தின் குழு, அன்று சந்திரனது குழுவைச் சந்தித்து, முன்னேற முடியாமல் திணறியது.

'தோல்வியை அடைந்து விடுவோமோ' என்று சிங்காரத்தின் தோழர்கள் தொங்கிய முகத்துடன் கேட்ட பொழுது 'நானிருக்க பயமேன்' என்று அவர்களை சமாதானம் செய்தான் சிங்காரம்.

சிங்காரத்தின் குழுவில் உள்ள அனைவரும் தொடப்பட்டும், பிடிக்கப்பட்டும் ஆட்டத்தை விட்டு வெளியேற்றப்பட்டார்கள். இப் பொழுது சிங்காரம் மட்டுமே தனியாக நிற்கிறான்.

ஆட்டத்தின் உச்சக்கட்டம் இது, 'சிங்காரம் ஆட்டத்தைவிட்டு வெளியேற்றபட்டால், அவனும் அவனது குழுவினரும் தோற்று விடுவார்கள்'. அப்புறம் குதிரை தூக்க வேண்டுமே!

சிங்காரம் இப்பொழுது அடுத்த குழுவை நோக்கிப் பாடிப் போக வேண்டும். யாரையாவது தொட்டு விட்டு வந்தால் தான் ஆட்டம் தொடரும். பிடிப்பட்டால் தோல்வி தான்.

சந்திரனையல்லவா சிங்காரம் குதிரை ஏற்ற வேண்டும்? இதை நினைக்கவே அவமானமாக இருந்தது.

ஆகவே, சிங்காரம் ஆவேசத்துடன் பாடிப் போனான். சந்திரனிடம் நன்றாக சிக்கிக் கொண்டான். நான்கு பேர்கள் நன்றாக இவனைப் பிடித்துக் கொண்டார்கள். ஒருவித வெறியுடன் எல்லோரையும் இழுத்துக் கொண்டு நடுக் கோட்டை நோக்கி வரும் பொழுது, மூச்சு நின்று போய்,

பாடுவதை விட்டுவிட்டான். மற்றவர்கள் பிடியை விட்டார்கள். உடனே எழுந்தான் சிங்காரம்.

''நான் கோட்டைத் தொட்டு விட்டேன். நீங்கள் எல்லோரும் 'அவுட்' என்றான்'' சிங்காரம்.

இல்லையென்று மற்றவர்கள் மறுத்தார்கள். 'ஆமாம்' என்று சிங்காரம் அழுத்தமாகச் சொன்னான். அவன் அதட்டலையும், ஆவேசத்தை யும் கண்டு பின் வாங்கிக் கொண்டார்கள்.

சந்திரன் முகத்தில் ஓங்கி ஒரு குத்து விட்டான் சிங்காரம். சந்திரன் உதடு கிழிந்து இரத்தம்கொட்டத் தொடங்கி யது. உன்னை என்ன செய்கிறேன் பார்' என்று இரத்தத்தைத் துடைத்துக்

கொண்டே, அடிக்கக் கையை ஓங்கினான் சந்திரன்.

மீண்டும் ஒரு குத்து விழுந்தது சந்திரன் முகத்தில், அவ்வளவுதான். திடீரென்று கீழே விழுந்தான். சந்திரனின் கைகளும் கால்களும் 'படக் படக்' என்று உதைத்துக் கொண்டு, சற்று நேரத்தில் அடங்கி விட்டன.

எல்லோரும் பயத்துடன் சந்திரனையே பார்த்துக்கொண்டு நின்றனர். அவர்களிலே தைரியசாலி ஒருவன், சந்திரன் மூக்கிலே கையை வைத்துப் பார்த்தான்.

மூச்சைக் காணோம்.

'சந்திரன் செத்துப் போயிட்டாண்டா' பேய்க் கூச்சல் போட்டான் அந்தப் பையன்.

அந்தச் சத்தம் கேட்டு அரண்டு போன அனைவரும். மூலைக்கொரு வராக தங்கள் வீடுகளை நோக்கி ஓடத் தொடங்கினர்.

சிங்காரம் எங்கே போவான்? அவன் தான் கொலை செய்தவன் ஆயிற்றே'

ஊருக்குள் சென்றால், அத்தனை பேரும் தன்னை அடித்தே கொன்றுவிடுவார்கள் என்ற பயம் சிங்காரத்தை மிரட்டியது.

'எங்கேயாவது ஓடிவிடு' என்று பயந்த மனம் சிங்காரத்தை பாது காப்புடன் விரட்டியது.

திரும்பிப் பார்க்காமலே ஓடத் தொடங்கினான்.

புயல் காற்றிலே சிக்கிய படகு போல, நூலறுந்து திரியும் பட்டம்

போல, அவன் போய்க் கொண்டே யிருந்தான்.

பட்டணம் வந்து சேர்ந்து பல நாட்களாகி விட்டன. தினமும் பசியோடு போராடினான். படுத்துக் கொள்ள இடமில்லாமல் திண்டாடினான். கிழிந்த உடைகளோடு, கேவலமான நிலையில் தெருக்களில் சுற்றிக் கொண்டிருந்தான்.

'கூலி வேலை செய்தால்தான் கால் வயிறாவது நிறையும்' என்று ஒரு முடிவுடன் வேலை செய்ய முனைந்தான்.

ஒருநாள் மாலை, சிங்காரம் ஒருபேருந்து நிலையத்தின் முன் நின்று கொண்டிருந்தான். காலையிலிருந்து பட்டினி, கூலி ஏதாவது கிடைத்தால்தான் சாப்பிட முடியும்,

என்ற பசி மயக்க நினைவோடு வருவோர் போவோரையெல்லாம் ஏக்கத்துடன் பார்த்தவாறு நின்று கொண்டிருந்தான்.

அழகான கார் ஒன்று வந்து நின்றது. அதிலிருந்து இறங்கிய நாற்பது வயது மதிக்கத்தக்க ஒரு மாது எதிர்ப் புறமுள்ள துணிக் கடையை நோக்கிப் போகத் தொடங்கினாள், கையிலே சிறு அலங்காரப் பை ஒன்று தொடங்கிக் கொண்டிருந்தது.

வாட்ட சாட்டமான உடல் அமைப்புள்ள ஒருவன், தீடிரென்று அந்த பெண்னை நோக்கிப் பாய்ந் தான். அவள் கைப் பையை பறித்துக் கொண்டு ஓடத் தொடங்கினான்.

'திருடன் திருடன்' என்று அவள் அலறிக் கத்தினாள்.

அக்கம் பக்கம் உள்ளவர்கள் அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டு நின்றிருந்தார்களே ஒழிய, அவனைப் பிடிப்பதற்குயாரும் முன்வரவே இல்லை. இதுதான் பட்டணத்துப் பண்பும் பழக்கமும்.

சிறுவன் சிங்காரம் கிராமத்து வளர்ப்பல்லவா!

அவன் உள்ளம் கொதித்தது. உடனே எதிரே ஓடி வந்து, அந்தத் திருடனின் இடுப்பைக் கோர்த்துப் பிடித்துக் கொண்டான். 'திருடன் திருடன்' என்று கத்தினான். திருடன் ஆத்திரமடைந்தாள் சிங்காரத்தின் பிடியிலிருந்து விடுபட ஒரு சுற்று சுற்றினான்.

சிங்காரம் ஒருபுறமும், கைப்பை ஒரு புறமும் சிதறிப் போய் விழுவதை

எல்லோரும் பார்த்தனர். அப்பொழு தும் யாரும் அந்தத் திருடனைப் பிடிக்க முன்வரவே இல்லை.

திருடன் தப்பி ஓடிவிட்டான். சிங்காரம் சுருண்டு கீழே விழுந்து கிடந்தான்.

கண் மூடித் திறப்பதற்குள் நடந்து முடிந்த இந்த நிகழ்ச்சியால் கற்சிலை போல் நின்றாள் அந்தப்பெண். சிறிது நேரங்கழித்தே சுய உணர்வு பெற்றாள். ஓடிப் போய் பையை எடுத்துக் கொண்டாள், சிங்காரத்திடம் ஓடோடி வந்தாள்.

மயக்கமாகக்கிடந்த சிங்காரத்தின் முகத்தில் சோடா வாங்கி வந்து தெளித்து, அவனது மயக்கத்தைத் தெளிவித்தாள்.

மயக்கம் தெளிந்த சிங்காரம், முனகியவாறு மெதுவாக எழுந்து

சுற்றுமுற்றும் பார்த்தான். ஒரு கூட்டமே கூடியிருந்தது.

கூட்டத்தை விலக்கி, சிங்காரத்தை தன் காரிலே ஏற்றிக் கொண்டு அந்த பெண் உடனே புறப்பட்டுவிட்டாள்.

'ஐந்து ஆயிரம் ரூபாய் என் பைக்குள் இருந்தது. உன்னால் தான் இந்தப் பணம் காப்பாற்றப்பட்டது' என்று கூறி, சிங்காரத்தின் திறமையையும், வீரத்தையும் பாராட்டினாள். தன் நன்றியைத் தெரிவித்தாள்.

உன் பெயர் என்ன? அன்புடன் கேள்வி வந்தது.

சிங்காரம்...மிக மெதுவாகவே கூறினான்.

உன் வீடு எங்கே?

எனக்கென்று வீடோ, ஆளோ இல்லை.

அப்படியென்றால்...

அநாதை...

அநாதையா? வருத்தத்துடன் அந்த பெண் கேட்டாள்.

சிங்காரத்தின் கண்களில் இருந்து கண்ணீர் பெருகியது. மேலும் கேள்விகள் கேட்கவோ, விசாரிக்கவோ அவள் விரும்பவில்லை.

படிக்க ஆசையிருக்கிறதா அல்லது வேலை செய்கிறாயா என்று அந்த மாது மிகவும் அன்புடன் கேட்டாள்.

ஒரு வேளை சாப்பாட்டுக்கு நாள் முழுதும் உழைத்தாலும், முடியவில்லையே நான் படிக்க ஆசைப்பட்டாலும் எப்படி முடியும்.

உல்லாசமாக வாழ்ந்த தன் கிராமத்து வாழ்க்கையையும், செல்லமாகத் தன் பெற்றோர்களுடன் வாழ்ந்த நாட்களையும் நினைத்த பொழுது சிங்காரத்தின் கண்கள் கண்ணீரைச் சிந்தின.

அழாதே தம்பி! எனக்கு வேண்டியவர்கள் ஒரு 'விடுதி' வைத்திருக்கிறார்கள். அங்கேயே தங்கிக் கொண்டு, அருகில் உள்ள பள்ளிக் கூடத்தில் படிக்கலாம், ஒரு நல்ல வேலை கிடைக்கும் வரை நான் நிச்சயம் உனக்குத் துணையாக இருப்பேன்.

நன்றிப் பெருக்குடன் அந்த மாது கூறியவுடன், சிங்காரம் தலையை ஆட்டித் தன் சம்மதத்தைத் தெரிவித்தான்.

கார் நின்றது. சிங்காரத்தை வெளியிலே நிறுத்தி வைக்காமல் தன் கூடவே அழைத்துச் சென்றதும்; விடுதி தலைவியுடன் பேசும் பொழுது இருக்கை கொடுத்து அமரச் செய்ததும், பருகுவதற்குப் பானம் கொடுத்ததும், சிங்காரத்தின் மனதில் நம்பிக்கையை ஊட்டின.

விடுதியிலே சேர்ந்து விட்டான் சிங்காரம். பள்ளிக்கும் ஒழுங்காகப் போகத் தொடங்கினான்.

மனதிலே தன் கடந்த காலத்தை நினைத்துக் கொண்டவாறே நடந்த சிங்காரம், தன் ஊருக்குள் நுழைந்ததையோ, தன் வீட்டு வாசலுக்கு வந்ததையோ மறந்து விட்டான்.

பல ஆண்டுகள் ஆனாலும், பழகிய அவனது கால்கள் வீட்டு வாசல் முன் தாமாகவே போய் நின்றன. காலில் கல் தடுக்கிவிட்ட பொழுதுதான், கற்பனை உலகத் தினின்றும் சுயநினைவுக்கு வந்தான்.

கண்கள் அந்த வீதியை ஒருமுறை சுற்றி வந்தன.

பல வீடுகள், அமைப்பில் மாறி யிருந்தன. ஓடுகள் மாட்டிக் கொண் டிருந்தன. புதிய வண்ணங்களைப் பூசிக் கொண்டிருந்தன. ஆனால்,

அவன் வீடு மட்டும் தான் பார்த்தது போலவேதான் பழைய கோலத்தில் இருந்தது.

சூரியன் மறையத் தொடங்கி விட்டான். சுற்றிலும் இருள் வந்து கூடுவதற்குத் தயாராக இருந்தது.

தன் வீடு பூட்டியிருந்ததால் வீட்டுத் திண்ணையில் போய் அமர்ந்துகொண்டான்.

வருவோர் போவோர் கூட, அவனையாரோ புதியவன் என்று பார்த்துக் கொண்டே சென்றனர். ஆனால் சிங்காரமோ யாரையும் தலை நிமிர்ந்து கூடப் பார்க்க வில்லை.

தன்னுடைய தாயையும், தந்தை யையும் ஒரு முறைப் பார்த்து விட்டு, உடனே போய் விட வேண்டும் என்பதே அவனுடைய திட்டமாகும்.

தன் பின்னால் யாரோ வருவது போல் இருந்தது சிங்காரத்திற்கு,

யாராயிருந்தால் நமக்கென்ன என்று இருந்தான்.

வந்தவன் சிங்காரத்தின் முகத்தைக் குனிந்து பார்த்தான். ஏதோ ஒரு தீர்மானத்திற்கு வந்தவனாய், சிங்காரத்தைத் தாக்க ஆரம்பித்து விட்டான்.

முகத்திலே பல குத்துக்கள் விழுந்தன. முடிந்தவரை தடுத்துக் கொண்டான். அடித்துக் கொண்டிருக்கும் பொழுதே வாயில் பல வகைச் சொற்களைப் பேசிக் கொண்டிருந் தான் அடித்தவன்.

பலர் ஓடி வந்து அவனைப் பிடித்துக் கொண்டார்கள். அவனோ மீண்டும் அடிக்கத் துடித்துக் கொண்டிருந்தான்.

'சந்திரன் செத்துப் போயிட் டான்னா நினைச்சே! உன்னை

சித்ரவதைசெய்யாட்டி என் ஆத்மா சாந்தியடையாதுடா'!

சந்திரன் தான் தன்னை அடித்தான் என்பதையும், அவன் சாகவில்லை என்பதையும் அறிந்த சிங்காரத்தின் மனம் மிகவும் அமைதி அடைந்தது.

'இத்தனை ஆண்டுகள் மனத் துன்பத்திற்கு ஆளாகி இருந்தோமே, என்று நினைத்தவாறே நின்று கொண்டிருந்தான் சிங்காரம்.'

முகத்தில் ஆங்காங்கே இரத்தம் கசிந்து கொண்டிருந்தது. கடைவாய்ப் பகுதியிலிருந்தும் இரத்தம் வழிந்தது.

சந்திரன் கத்தியதிலிருந்து, இங்கே அடிபட்டவன் 'சிங்காரம்' என்பதை அறிந்த அத்தனை பேரும் ஓடி வந்து அவனை ஆனந்தத்துடன் பார்த்தார்கள். சிலர் தழுவிக் கொண்டார்கள்.

எல்லோரையும் பார்த்துச் சிரித்த வாறே இருந்த சிங்காரம், திடீரென்று சந்திரனிடம் ஓடினான். அவன் கையைப் பிடித்துக் குலுக்கினான்.

கைப்பட்டதுமே, 'ஆ' என்று கத்தினான் சந்திரன். ஆமாம் அடித்த வேகத்தில் கை சுளுக்கிக் கொண்டு, வீங்கிப் போயிருந்தது.

'விளக்கெண்ணெய் கொண்டு வா' என்று தனது பழைய நண்பனைக் கேட்டான் சிங்காரம்.

கொண்டு வந்ததும் வாங்கி, சந்திரன் கையில் போட்டுத் தடவி, இதமாக நீவி சுளுக்கை இழுத்து விட்டான்.

எல்லோரும் ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

கோயிலுக்குப் போயிருந்த சிங்காரத்தின் தாயாரும் தந்தையும்,

தன் வீட்டின் முன்னால் இருந்த கும்பலைப் பார்த்து விட்டு விரைந்து வந்தனர்.

'உன் மகன் வந்துவிட்டான்' என்று கூறக் கேட்ட சிங்காரத்தின் தாய், அவனை அப்படியே ஆரத் தழுவிக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் விட்டாள்.

சந்திரன் அவனைத் தாக்கியதையும், சிங்காரம் எதிர்த்து அடிக்காமல் இருந்தையும், எல்லோரும் கதையாகக் கூறினார்கள்.

சிங்காரத்தின் தந்தை வேகமாக ஓடி வந்து 'ஏண்டா, உனக்கு மானம் வெட்கம் சூடு சொரணை ஏதுமில்லையா! அடி வாங்கிய - நீ, எதிர்த்து அடிக்கக்கூடவா உன் உடம்பில் வலுவில்லை!' என்று கோபமாகக் கேட்டார்.

**'இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்**

**என்ன பயத்ததோ சால்பு'**

என்ற குறளை மிகவும் அமைதியாகக் கூறினான் சிங்காரம்.

என்ன கூறுகிறாய்' என்பது போல், எல்லோரும் அவனை ஏறிட்டுப் பார்த்தனர்.

தனக்குத் துன்பம் செய்கின்றவர்களுக்கும், அவர்கள் மனம் இன்பம் அடைவது போல பிரதி உதவி செய்வதுதான் மனிதப் பண்பாகும்.

தனக்குத் துன்பம் கொடுத்தவரை உடனே தண்டிப்பவர்களுக்குக் கிடைக்கும் இன்பம் ஒரு நாளைக்குத் தான் இருக்கும். அதை அமைதியாகப் பொறுத்துக் கொண்டவர்களுக்கு இன்பம் எப்பொழுதும் கிடைக்கும்' என்று மீண்டும் ஒரு குறளைச் சொன்னான்.

**'ஒறுத்தார்க்கு ஒரு நாளை இன்பம் பொறுத்தார்க்கும்**

**பொன்றும் துணையும் புகழ்.'**

நம்ம சிங்காரம் எப்படி மாறிட்டான்? என்று அவன் தாயார் மற்றவர்களிடம் கூறினாள்.

ஆமாம்மா! என் வேலை ஆசிரியர் வேலையாயிற்றே. அன்பாலும் அறிவாலும் ஒரு புதிய சமுதாயத் தையே உருவாக்குகின்ற பொறுப்பு எங்களிடம் இருக்கிறதே! அதற்கு முதலில் தேவை பொறுமை.

'நான் செய்த தவறுக்கு இத்தனை ஆண்டுகள் கழித்துத் தண்டனை கிடைச்சிருக்கு, அந்த தண்டனையை ஏற்றுக் கொள்ள நான் ஏன் தயங்க வேண்டும்? சந்திரன் செய்தது சரி' அதனால் தான் நான் அமைதியாக இருந்தேன்.

என்னை மன்னிச்சிடு சிங்காரம்!

இரு நண்பர்களும் மீண்டும் ஒருவரை ஒருவர் கட்டிப் பிடித்துக் கொண்டனர் அன்பின் மிகுதியால்.

ஆத்திரம் வரும் பொழுது அறிவு விலகிப் போய்விடுகிறது. அறிவு மீண்டும் வரும்பொழுது ஆத்திரம் வெட்கப்பட்டு ஓடியே விடுகிறது.

ஆகவே 'ஆத்திரம் அறிவுக்குச் சத்துரு' என்பதை மறந்து, 'அன்பு வழியே இன்ப வழி' என்று நாம் வாழ்வோம் என்றான் சிங்காரம்.

சிங்காரத்தின் பெற்றோர்கள் தலை நிமிர்ந்து, பெருமை பொங்க அந்தக் கூட்டத்தில் நின்று கொண்டிருந்தனர்.



# நல்ல கதைகள்

பல்கலைப் பேரறிஞர்

டாக்டர் எஸ். நவராஜ் செல்லையா

M.A., M.P.Ed., Ph.D., D.Litt., D.Ed., FUWAI

